ஸ்ரீ குருப்யோ நம:

# சித்தர்களும் சித்திகளும்




## சுவாமி பிரபஞ்சநாதன்

# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | சித்தர்களும் சித்திகளும் |
| தொகுப்பாசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற்பதிப்பு | : | *2021* |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | *30* |
| தாள் | : | *A5 (5.83" X 8.27")* |
| எழுத்து அளவு | : | *12* புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

# சித்தர்களும் சித்திகளும்

சித்தம் என்பது மனமாகும். தன்னிச்சையாகத் திரியும் மனதினை அந்த அறிவிடம் (இறைவனிடம்) திருப்பிவிட்டு, சித்தத்தத்தை சிவமயமாய் மாற்றிக் கொண்டவர்கள் ‘**சித்தர்கள்**’ ஆவார்கள்.

‘**சித்**’ என்றால், “**அறிவு**”. அந்த அறிவை அறிந்தவர்கள் அறிஞர்கள் ஆகையால், அவர்களை சித்தர்கள், ஞானிகள் என்று எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளலாம்.

பொதுவாக, “**சித்தர்**” என்ற சொல்லுக்கு சித்தம் தெளிந்தவர்கள் என்றும், சித்திகளைப் பெற்றவர்கள் என்றும் பொருள். அதாவது, சித்திகளைப் பெறுவது என்பது, பெரும்பாலானவர்கள் கருதிக்கொண்டிருப்பது போன்று, காற்றில் மிதப்பது, நெருப்பில் நிற்பது, நீரில் நடப்பது, ஆகாயத்தில் பறப்பது என்று மட்டும் ஆகி விடாது.

சித்த நிலையை (மனதை) `**சிவநிலையாக்கிய முக்தி இன்பம்**’ என்பதும் ‘**சித்தி**’ என்கின்றனர் சித்தர்கள்.

**‘அருள் திறலால் எளிதாகச் செய்து முடிக்கும் செயல்’** இதுதான் சித்தி என்பதற்கு சித்தர் பெருமக்கள் கூறும் அரும்பொருள்.

பொதுவாக, சித்திகளை மூவகையாகப் பிரித்துச் சொல்வார்கள். அவைகள், **ஞான சித்தி, யோக சித்தி, கரும சித்தி** என்பனவாகும்.

1. **ஞான சித்தி:**

இது, மூவகை சித்திகளில் முதன்மையானது. கலை அறிவு, ஆன்ம விசாரணை, அகமுக பாவனை, பிரமானுபவம் பெறுதல் ஆகியவற்றால் “**ஞானசித்தி**” கைகூடும் என்கின்றன ஞானநூல்கள்.

இதைப் பெற்றவர்களுக்கு அனைத்து சித்திகளும் ஏவல் செய்யக் காத்திருக்குமாம்.

2. **யோக சித்தி:**

இது, யோகத்திற்கான சித்தி. இதில் அட்டாங்க யோகம் பயின்று, அதன் வாயிலாக மூலாதாரத்தை விழிப்புறச் செய்து, ஆறு ஆதாரங்களைக் கடந்து சித்தி அனுபவம் பெறுவது. இத்தகைய யோகசித்தி கைவரப் பெற்றவர்கள், அரிய பல சாதனைகளைப் புரியும் வல்லமைப் பெற்றவர்கள்.

### 3. <u>கரும சித்தி:</u>

மூன்றாவதாக உள்ள இந்த கருமசித்திகளைப் பெரியோர்கள் பெரும்பாலும் மதிப்பதில்லை.

கரும சித்திகள் - 8.
யோக சித்திகள் - 64.
ஞான சித்திகள் - கணக்கற்றவைகள். என்று கூறப்பட்டுள்ளது.

இருப்பினும், வள்ளலார் போன்ற ஞானிகள் 647 கோடி சித்திகள் உள்ளதாக கூறுகின்றனர்.

## <u>அஷ்ட கர்ம சித்திகள்</u>

இதிலே, “**அஷ்ட கர்மம்**” (அஷ்ட என்றால் எட்டு என்றும், கர்மம் என்றால் செயல் என்றும் பொருள்.) என்பது, எட்டு விதமான செயல்கள் என்று பொருள்.

அதாவது 8 கர்ம சித்திகள் எனப்படும்.

### 1. <u>வசியம்:</u>

நம்மைப் பிடிக்காதவர்களையும், நம்மை விரும்ச் செய்தல், நம்மைக் கண்டவர்கள் நம்மீது வசியமாகுதல், நம் சொல்படி கேட்டு நடத்தல்.

## 2. மோகனம்:

நம்மைக்கண்டவர்கள் நம்மீது ஆசைப்பட வைத்தல். அதாவது, மோகம் கொள்ளச் செய்தல்.

## 3. ஆக்ருஷனம்:

எப்படிப்பட்டவர்களையும், காந்தம் எப்படி இரும்பை கவ்வுகின்றதோ, அதுப்போன்று, நம்பால் கவரக்கூடியது. அத்துடன் ஓடிப்போனவர்களை திரும்ப வரவழைத்தல் செய்வது.

## 4. ஸ்தம்பனம்:

தன்னை கண்டதும் அனைத்தையும் ஸ்தம்பிக்க செய்வது, அதாவது அசைவற்று இருக்கச் செய்வது.

## 5. பேதனம்:

கணவன், மனைவியையோ, நண்பர்களையோ, சகோதர, சகோதரி உறவுகளையோ பிரிப்பது.

## 6. வித்வேஷனம் :

ஒருவருக்கொருவர் கடும்பகையை உருவாக்கி அவர்களை அழிக்கச் செய்வது.

### 7. உச்சாடனம்:

எவரையும் நிலைகுலையச்செய்து அவ்விடத்தை விட்டு ஓட்டுவது.

### 8. மாரணம்

மேற்கண்ட அனைத்து செயல்களிலும் மிக, மிகக்கொடியது இது. அதாவது, மற்றவர்கள் உயிருக்கு கேடு விளைவிப்பது (உயிரை எடுப்பது).

## யோக சித்திகள்

**அந்நெறி இந்நெறி என்னாதே அட்டாங்கந்**
**தன்னெறி சென்று சமாதியிலே நின்மின்**
**நன்னெறி செல்வார்க்கு ஞானத்தில் ஏகலாம்**
**புன்னெறி ஆகத்திற் போக்கில்லை யாகுமே. -** (திருமந்திரம்)

உலகில் பலவிதமான ஆன்மீக நெறிகள் அனுசரிக்கப்படுகிறது. அவ்வாறே, பலவிதமான யோகப் பயிற்சிகள் பயிற்றுவிக்கப்படுகிறது. அதிலே, உடலை வளர்ப்பதற்கும், பிராணனை கட்டுப்படுத்துவதற்கும், மனதைக் கையாள்வதற்கும் என ஏகப்பட்ட யோகப்பயிற்சிகள் பயன்பாட்டில் உள்ளன.

இதை அன்றே அறிந்து வைத்துள்ள திருமூலர் தனது திருமந்திரப்பாடலில் கூறுகிறார், அந்த நெறி, இந்த நெறி என்று அங்கும், இங்கும் அலைபாயும் மனதினால் அலைந்து திரியாமல், '**அஷ்டாங்க யோகம்**' மட்டுமே தன்நெறி என்று தேர்ந்தெடுத்து, அதிலேயே, நிலையாக நின்று, படிப்படியாகப் பயிற்சிகளைப் பயின்று, இறுதியில் '**சமாதி**' பழகி, இந்த நன்நெறியிலே நிற்பவர்கள் மட்டுமே "**ஞானம்**" பெற்று உய்யலாம்.

அதைவிடுத்து, யாகம், ஹோமம், புண்ணிய தீர்த்தமாடல், புனித ஸ்தலங்களுக்கு பயணமாதல் போன்ற ஆகம நெறிகளின் வழி போவதினால் பயன் ஒன்றுமில்லை! என்பதை அறிந்துக்கொள்ள வேண்டும் என்று கூறுகிறார்.

பொதுவாக, திருமூலர் போன்ற சித்தர்கள் யோக, ஞானத்தில் மிக உயர்ந்த உன்னத நிலையை அடைந்தவர்கள். இவரைப்போன்ற ஞானிகள் மற்ற மதங்களிலும் இருக்கிறார்கள்.

இஸ்லாமிய மதத்தில் அவர்களுக்கு '**சூப்பிக்கள்**' என்று பெயர், பௌத்த மதத்தில் அவர்களுக்கு '**ஜென் ஞானிகள்**' என்று பெயர்.

இதுப்போன்ற மற்ற மதங்களில், சித்திகள் பெற்ற சித்தர்கள் என்றால், அதிலே இறை தூதர்களாக வந்த

**ஏசுகிறிஸ்து** மற்றும் **முகமது நபிகள்** போன்றவர்களுக்கும் பல சித்திகள் தெரிந்திருக்கின்றன.

அதுவே, நம் சனாதன தர்மத்தின் வழி வந்த ஞானிகளுக்கும், சித்தர்களுக்கும் ஒரு வேறுபாடு இருக்கிறது,

அது என்னவெனில், தத்வ ஞானிகள் அறிவில் சிறந்தவர்களாக மட்டுமே இருப்பார்கள். இவர்கள் சித்திகளை விரும்ப மாட்டார்கள். ஆனால், சித்தர்கள் என்பவர்கள் அறிவிலும், சித்திகளிலும் சிறந்தவர்களாக இருப்பார்கள்.

இவர்கள் முற்றிலும் மாறுபட்டவர்கள். அத்துடன் "**சீவனே சிவம்**" (மனமே அறிவு) என உணர்ந்து, அதையே மக்களுக்கு போதித்தவர்கள். இதனால் சித்தர்களை ஏற்காத பல சமய, மதவாதிகளும் உண்டு.

இயற்கையான இயல்புகளை உடைத்தெறியக் கூடியவர்களாகவும், மூடநம்பிக்கைகளை தகர்த்தெறியக் கூடியவர்களாகவும், மனதினை, அறிவுடன் இணைத்துக் கொள்ளும் இன்றியமையாத யோகத்தைப் பயின்ற பண்பாளர்களாகவும் பலரும் இருந்தனர்.

அந்த வகையிலே, ஆன்மீகத்தில் தன்னையே கடவுளென போதிக்கும் வகையில் சிலரும், மனதினை அடக்கி ஆளும் வகையிலே யோகிகளாக பலரும், பல

துறைகளில் சிறந்து விளங்குகின்ற விவேகத்தைப் பெற்றவர்களாக (ஞானிகளாக) இருந்திருக்கின்றனர்.

இவ்வாறு, அவர்கள் பலபாதைகளில் பயணித்து உள்ளனர் என்பதற்கு சான்றாக, அவர்களது பயணப் பாதைகளைப் பற்றியும் சாஸ்திரங்கள் விளக்குகின்றன.

அந்த வகையிலே, **சரியை, கிரியை, யோகம்** மற்றும் **ஞானம்** என்ற பாதைகள் பல இருப்பினும், அதில், இறுதி நிலையான ஞானத்தை (அறிவை) அடைவது மட்டுமே, ஆன்மீகத்தின் உச்ச நிலையாகிய ஆன்மாவை அனுபவமாக உணர்தல் என்கின்றனர்.

**ஆணவம், கன்மம், மாயை** என்ற மூன்று மலங்களால் (பாசங்கள்) ஆட்பட்ட உயிர்கள் அம்மலங்களினால் பல பிறப்புகளுக்கு உட்படுகின்றன.

அவ்வாறு, பிறப்புகள் தோறும் தத்தமது ஊழ் வினைகளுக்கு ஏற்றவாறு, பல்வேறு விதமான இன்ப, துன்பங்களை அனுபவிக்கின்ற பொழுது, அதைப்பற்றி அடுத்துவர்களிடம் கூறினாலும், அதனால் பயன் ஒன்றும் இல்லாத அவர்களது, இன்ப, துன்பங்களைக் காணும் பொழுது, தன்னுடையதே மேல் என எண்ணி, இவர்களது அனுபவங்களை பகிரங்கமாக பகிர்ந்துக் கொள்ள விரும்பி, அந்த பரமனை நாடுகின்றன.

அவ்வாறு, பரமனிடம் தன் பாவ, புண்ணியம் பற்றிக்கூறி, அதற்கான ஆறுதல்களைப் பெறவேண்டி, அதன் பலனாகப் பல, **‘சமய நெறிகள்’** உண்டாயின. அத்தகைய சமய நெறிகளைச் சைவ சித்தாந்த நூல்களும், திருமுறைகளும் நான்காக வகுக்கின்றன.

**சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்**
**தாதமார்க்கம் மென்றுஞ்சங் கரனை யடையும்**
**நன்மார்க்கம் நாலவைதாம் ஞான யோகம்**
**நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்**
- (சுப. 270)

என்பது **சிவஞானசித்தியார்** பாடலாகும்.

பொதுவாக, நால்வகை நெறிமுறைகளாக மனிதன் கடைபிடிக்க வேண்டிய **சன்மார்க்கம், சகமார்க்கம், சற்புத்திர மார்க்கம், தாதமார்க்கம்** என்பன இறைவனை அடையும் நன்மார்க்கங்கள் ஆகும்.

இதிலே, **சன்மார்க்கம்** மட்டுமே முதலும், முடிவுமான மேலான மார்க்கம் என்பதினால், ஒவ்வொரு மனிதனும், மனதை விசாரித்து, விவேகத்தை அடைந்து, அந்த அறிவை அறிய வேண்டும் என்று ஆன்றோர்கள் ஆசைப்பட்டனர்.

அதன்பயனாக, அவர்கள் மனிதன் பயணிக்கின்ற பாதைகளை **சரியை, கிரியை, யோகம், ஞானம்** என்று நான்காக வகுத்தனர்.

அதிலே, '**தாசமார்க்கம்**' என்ற நெறி வழியில் பயணித்தால், "**சாலோகம்**" என்ற இறைவனுடைய உலகத்தை அடையலாம்.

'**சற்புத்திர மார்க்கம்**' என்ற நெறி வழியில் பயணித்தால், "**சாமீபம்**" என்ற இறைவனுக்கு அருகில் இருக்கும் அருளைப் பெறலாம்.

'**சகமார்க்கம்**' என்ற நெறி வழியில் பயணித்தால், "**சாரூபம்**" என்ற இறைவனின் உருவத்தை அடையலாம்.

இறுதியான '**சன்மார்க்கம்**' என்ற நெறி வழியில் பயணித்தால், "**சாயுச்சியம்**" என்ற இறைவனுடன் இரண்டறக் கலத்தல் நிலை உண்டாகலாம்.

அதாவது, ஜீவாத்மா (**மனம்**) பரமாத்மாவுடன் (**அறிவு**) ஐக்கியமாகும் நிலையாகும்.

வடமொழியில், இந்த சாயுச்சியம் என்பது "**பரமுத்தி**" என்று கூறப்படுகிறது. மற்ற மூன்றும் '**அபரமுத்தி**' என்றும் கூறப்படும்.

இந்த நான்கு வழியிலும் அனேக மகான்கள் பயணித்துள்ளனர். அந்த வகையிலே, போகர் என்ற சித்தர் நவபாஷாண முருகன் சிலை செய்து வழிபட்டு வந்ததினால், இவர் உருவவழிபாட்டினை ஊக்குவித்தார் என்பது தெரிய வருகின்றது.

அவ்வாறே, அகத்தியர் லிங்க வழிபாட்டினை (அருஉருவம்) விரும்பியுள்ளார் என்பதும் தெரிய வருகிறது.

அதுப்போன்றே, பாம்பாட்டி சித்தர், அகப்பேய் சித்தர் போன்றவர்கள் மனதினைக்கொண்டு, அந்த அறிவை (அருவக்கடவுளாக) அறிந்துள்ளனர்.

இவ்வாறு, பலவகையான கொள்கைகளைக் கொண்டவர்களாக சித்தர் பெருமக்கள் இருந்தாலும், இவர்கள் அனைவரும் கூற வந்த விஷயம் என்பது, மனிதன் மனதினை வென்று, மகத்தான அந்த அறிவை அறியும் உயரிய வழிக்கு செல்லும், சன்மார்க்க வழிமுறையை மட்டுமே ஆகும்.

அதற்கான படி நிலைகளாக **சரியை, கிரியை, யோகம்** போன்றவைகளை பயன்படுத்திக் கொண்டாலும், இறுதியில் அடைகின்ற '**ஞானம்**' என்ற அறிவு நெறி மட்டுமே, மனிதனை **பிறப்பு - இறப்பு** என்ற சம்சார சாகரத்தில் இருந்து கரைசேர்க்கும் '**தோணி**' போன்றது என்கின்றனர் சித்தர்கள்.

இத்தகைய சித்தர்களின் மேம்பட்ட அறிவு திறத்தால் இரசவாதம், நாடிசோதிடம், பட்சி சாஸ்திரம், சித்த வைத்தியம், யோகம், போன்ற பல துறைகளில் பல முன்னேற்றங்கள் உண்டாயின.

அதுமட்டுமல்லாது அவர்கள், உலோக வகைகள், உப்பு வகைகள், பாஷாண வகைகள், வேர் வகைகள், பட்டை வகைகள், பிராணிகளின் உடம்பிலே உற்பத்தியாகும் கோரோசனை என்ற கஸ்தூரி, மூத்திரம், மலம் முதலியவைகளின் முக்கியத் தன்மைகளைப் பற்றி ஆராய்ந்து, அவைகளின் குணங்களைக் கொண்டு பல்வேறு மருத்துவங்களைக் கையாண்டு, கடை நிலை மக்களையும் கரை சேர்த்தனர். அத்துடன் அவர்களும் கற்ப மருந்துகளை உட்கொண்டு, உயிர் வளர்த்தனர்.

மேலும், அவர்கள் முழுக்க முழுக்க காட்டிலும், குகையிலும் ஆராய்ச்சிகள் செய்ததால், சாதாரணமான மக்களுக்கு தெரியாத, பல அரிய மூலிகைகளையும், மருந்துகள் செய்முறைகளையும் நன்கு அறிந்திருந்தனர்.

அத்தகைய சித்தர் பெருமக்கள் ஆயகலைகள் அறுபத்தி நான்கில் சிறந்து விளங்கியிருக்கின்றனர்.

இதிலே ஒவ்வொரு சித்தரும், ஒவ்வொரு கலையில் உயர்ந்து, மிகவும் கைத்தேர்ந்தவர்களாகவும் விளங்கியிருக்கின்றனர்.

போகர் என்னும் சித்தர் பாஷாணங்களைக் கொண்டு, சிற்பங்களை வடிப்பதில் சிறந்த வல்லுநராக திகழ்ந்திருக்கிறார். அவ்வாறே, பாம்பாட்டிசித்தர் விஷ முறிவு மருந்துகளை பயன் படுத்தியிருக்கிறார்.

அகத்தியர், திருமூலர் முதலானோர் அதிக எழுத்தாற்றல் கலையிலும், அத்துடன், யோக, ஞானம் என எல்லாவற்றிலுமே சிறந்து விளங்கியதற்கான குறிப்புகள் கிடைக்கின்றன.

இந்த குறிப்புகளை சித்தர் பெருமக்கள் தங்கள் நூல்களில் பல பரிபாஷை பாடல்களாக பாடியுள்ளனர்.

சரி! அறுபத்தினான்கு சித்துக்கள் என்னென்ன?

இந்த 64 சித்துக்களுக்கான பாடலை அகத்திய முனிவர் அருளியதைக் காணலாம்.

“சித்தான அறுபத்தி நாலுக்கும் பேர்
செப்புகிறேன் புலத்தியனே தெளிந்து கேள்
முத்தான பிரவதிக சித்து (1) வொன்று
சுத்தமான சுக்கிலத்தின் சித்து (2) வொன்று
சுகமான பிரம்குலச் சித்து (3) வொன்று
பத்தான பிறையதிகச் சித்து (4) வொன்று
பாங்கான அங்கிசத்தின் சித் (5) தொன்றாச்சே"

"ஒன்றான பெண்மயமாம் சித்து (6) வொன்று
வொடுங்காத பவமூலச் சித்து (7) வொன்று
பன்றான ஈசற்குலச் சித்து (8) வொன்று
பராபரமாம் தாதுவெனும் பரம சித்து (9)
குன்றான அசுரமேனும் சித்து (10) வொன்று
குறையாத தானியமாம் சித்து (11) வொன்று
சென்றகன்ற பிரமாதிச் சித்து (12) வொன்று
திறமான அனுமாதிச் சித் (13) தொன்றாச்சே"

"ஆச்சப்பா விக்கித குலச் சித்து (14) வொன்று
அடங்காத சித்திரமாம் சித்து (15) வொன்று
மூச்சப்பா சிவநிதியாம் சித்து (16) வொன்று
முறையான அருணவலுச் சித்து (17) வொன்று
காச்சப்பா பருத்திளனும் சித்து (18) வொன்று
கரைகாணா அதி ரூபச் சித்து (19) வொன்று
பாச்சப்பா சருவ குலச் சித்து (20) வொன்று
பண்பான மோகினியாம் சித்து (21) வாமே"

"ஆமப்பா வினோதமய சித்து (22) வொன்று
அசையாத விகுர்த்திளனும் சித்து (23) வொன்று
நாமப்பா காரூபச் சித்து (24) வொன்று
நாதமெனும் அன்புநிலைச் சித்து (25) வொன்று
காமப்பால் விசயமெனும் சித்து (26) வொன்று
கருணைபெறும் செயரூபச் சித்து (27) வொன்று
தாமப்பா மதன சித்து (28) மொன்று
தருகாத தும்பிவனச் சித் (29) தொன்றாமே"

"சித்தான பரிநகுலச் சித்து (30) வொன்று
திறமானா நரிபரியம் சித்து (31) வொன்று
வித்தான வகாரமயச் சித்து (32) வொன்று
விதமான சாந்த விதச் சித்து (33) மொன்று
சுத்தமான தாம்பிரமாம் சித்து (34) வொன்று
தொலையாத சலபேதிச் சித்து (35) வொன்று
முத்தான அசுபதியாம் சித் (36) தொன்று
முறையான சிங்கமுகச் சித்து (37) வொன்றே"

"சித்திக்கும் ரிஷபமுகச் சித் (38) தொன்று
சிவசிவா சித்துமாகச் சித் (39) தொன்று
பத்திக்கும் பரமபரச் சித் (40) தொன்று
பகர் பஞ்சி கர்ண சித்து (41) அதிக வித்தை
உத்திக்கும் உத்திகரு உரிமைச் சித்து (42)
உருவான மறைப்பினிலே அனந்த சித்து (43)
வெற்றிக்கும் வெற்றி முனை சித்து (44) வொன்று
வேடிக்கை மதுரகெளிச் சித்து (45) வோன்றே"

"மதுராதி மாமோகச் சித்து (46) வொன்று
மங்கையர்கள் அதிமோகச் சித்து (47) வொன்று
விதனமுடன் விதானம் வரும் சித்து (48) வொன்று
வேடிக்கை காலத்தில் அதிக சித்து
சுகாமான சலத்தம்ப சித்து (49) வொன்று
சுருக்கமான அக்கினியில் லனந்தம் சித்து (50)
அதமான மாரனத்தில் லனந்தம் சித்து (51)
ஆக்கையுறு மாறாட்ட மான சித்தே" (52)

"மாறாட்ட மான பேதனமாம் சித்து (53)
வையகத்தோர் தனை மயக்கும் வாடைச்சித்து (54)
நீறாட்டமானதிலே நனையாச் சித்து (55)
நிஷ்டையிலே தம்பிக்கும் வாயுத்தம்பம்
கோறாட்ட விநோததந்தி லதிக சித்து (56)
குமரி விளையாடு கின்ற கோலச் சித்து (57)
பாராட்டம் பண்ணுகின்ற அரவின் சித்து (58)
பகைத்தவர்த்த மதியகற்றும் பாரிச் சித்து" (59)

"பாரப்பா முத்தி தரப் படைக்கும் சித்து (60)
பார்க்கையிலே தீஎரிந்து பறக்கும் சித்து (61)
நேரப்பா தீ அவிக்கும் சித்து (62)
நிமைக்கும் முன்னே காதவழி நெருங்கும் சித்து (63)
வீரப்பா செய்யாமல் அடங்கும் சித்து (64)
வெகுகோடி சித்துக்கள் விபரமாக
ஆரப்பா அறிவார்களறுபத்து நாலு
மடக்கமுடனாடு நீதான் பாரே"

இவ்வாறு 64 சித்திகளைப் பற்றியும், அதன் நன்மை, தீமைகள் பற்றியும் விரிவான விளக்கங்களை நம் சித்தர்பெருமக்கள் தங்களது சித்தர் நூல்களில் பரிபாசை பாடல்களாக வெளிப்படுத்தியுள்ளார்கள்.

இதுமட்டுமின்றி, யோகப்பாதையில் பயணிக்கும் சாதகர்கள் அஷ்டாங்க யோகத்தின் எட்டு வகையான சித்திகள் அடங்கிய "**அஷ்டமா சித்திகள்**" பற்றியும் அறிய முடியும் என்கின்றனர்.

ஆகவே, உலகம் தோன்றிய காலம் முதற் கொண்டு, இன்றுவரை மனித மனம் மேற்கொண்ட ஆராய்ச்சிகள் எண்ணிலடங்காதவைகளாக உள்ளன.

அவ்வாறு, மனதினால் மனிதன் வெளியே தேடிக் கண்டுபிடித்தவைகள் எல்லாமே, அவனது புற உலக வாழ்க்கைக்குப் பயன்பட்டன எனலாம்.

அதிலே சில மகத்தான மனிதர்கள் மட்டும் உள்ளே தேடிக் கண்டுபிடித்தவைகள் எல்லாமே, அவர்களது அக உலக வாழ்க்கைக்கு வழிகாட்டின எனலாம்.

இதுப்போன்ற, இகம், பரம் என்ற இரண்டுக்கும் உற்றத்துணையாக இகபர "**ஞானம்**" என்பது அவசியம் ஆதலால், அவைகளை இரண்டு வகைகளாகப் பிரித்து, அதில் புற உலக வாழ்க்கைக்கு பயன்படுபவைகளை "**விஞ்ஞானம்**" என்றும், அக உலக வாழ்க்கைக்குப் பயன்படுபவைகளை "**மெய்ஞானம்**" என்றும் அறிந்தனர்.

அவ்வாறே, மனதின் மகத்தான ஆற்றலை உணர முடியாத சராசரி மனிதர்களை '**அஞ்ஞானிகள்**' (அறியாமையுடையவர்கள்) என்றும், அதுவே, மனதின் மகாசக்தியின் ஆற்றலை முழுமையாகக் கண்டுணர்ந்து பயன்படுத்தியவர்களை '**ஞானிகள்**' (அறிவுடையவர்கள்) என்றும் அறிந்தனர்.

இதிலே, ‘**அறிவு**’ என்றால் “**சித்**” என்றும், அந்த ‘**சித்**’ என்பது “**சத்**” ஆக இருப்பு கொண்டுள்ள இடம் “**சித்தம்**” என்றும், உணர்ந்துக் கொண்டவர்களை “**சித்தர்கள்**” என்றும் கொண்டாடினர்.

அத்தகைய ‘**சித்தத்தினுள்ளே சிவலிங்கம் காட்டி, அணுவிற்கணுவாய், அப்பாலுக்கப்பாலாய் நின்ற**’ அதை, சித்தத்தில் கண்டுணர்ந்துக்கொண்ட சித்தர்கள் பலரும் பலவகையான “**சித்திகள்**” அடைந்திருந்தனர்.

அத்தகைய சித்தர்பெருமக்களுக்கு கிடைத்துள்ள “**சித்திகள்**” என்பது, சித்தியாவது அல்லது ‘**கைகூடுவது**’ என்ற பொருள்பட, அவர்களது சித்தத்தின் (மனதின்) ஆற்றலால், அனேக அற்புதங்களை ஆற்றக்கூடிய ஆற்றல்கள் கைவரப் பெற்றவர்கள் என அறியலாம்.

இத்தகைய சித்தர்பெருமக்கள் யோகக்கலையை சாதனமாகக் கொண்டு, அதிலுள்ள ‘**அஷ்டாங்க யோகம்**’ என்ற எட்டு விதப் பயிற்சிமுறைகளைப் படிப்படியாகப் பயின்று, அதன்பலனாக “**அஷ்டமா சித்திகள்**” கிடைக்கப் பெற்றனர்.

**அணிமா** - அணுவைப்போல் சிறிதாக இருத்தல்.
**மகிமா** - பெரிதிலும் பெரிதாக இருத்தல்.
**இலகிமா** - காற்றைப்போல் இலேசாக இருத்தல்.

**கரிமா** - கனமானதுப்போல் பாரமாக இருத்தல்.

**பிராத்தி** - மனம் நினைத்தவைகளை அடைதல்.

**பிராகாமியம்** - உடலைவிட்டு பிற உடலில் உட்புகுதல்.

**ஈசத்துவம்** - அனைத்துமாக தானே இருத்தல்.

**வசித்துவம்** - அனைத்தையும் வசப்படுத்தல்.

ஆக, இந்த எட்டு சித்திகளையும் '**அஷ்டமா சித்திகள்**' என்றனர்.

## ஞான சித்திகள்

**சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தால்**
**புத்திக ளானவை எல்லாம் புலப்படும்**
**சித்திக லெண் சித்தி தானந் திரிபுரைச்**
**சக்தி அருள்தரத் தானுள வாகுமே. -** (திருமந்திரம்)

படிப்படியான பயிற்சியினால், இந்த யோகத்தை முறையாகப் பயின்றதினால், அதன்பயனாக '**அஷ்டமா சித்திகள்**' மட்டும் இன்றி, சித்தம் சிவமயமாய் ஆனதின் விளைவாக, அனைத்தையும் அறிகின்ற அறிவாகிய சிவத்தைக் கொண்டு, அந்த '**திரிபுரை**' சக்தியாகிய, மனதையறிந்து, அந்த மனமும், அறிவும் வேறு, வேறல்ல என்றுணர்ந்து, அந்த சிவசக்தி சொரூபமாகவே தன்னை அறிகின்ற "**ஞானமும்**" அடையமுடிகின்றன.

**என்னை அறிந்திலேன் இத்தனை காலமும்**
**என்னை அறிந்தபின் ஏதும் அறிந்திலேன்**
**என்னை அறிந்திட்டு இருந்தாலும் கைவிடாது**
**என்னை விட்டு என்னை உணர்கின்றானே.**
- (திருமந்திரம்)

என்னையறியாமல் இத்தனைக்காலமும் இருந்து, இப்பொழுது என்னையறிந்தபின், ஏதுமறியாத என்னைக் கொண்டே, என்னை நான் உணர்கின்ற உன்னத நிலை உண்டானது என்கிறார்.

அதாவது, ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களால் சூழப்பட்ட '**மனம்**' தனித்து எதையுமே அறிய முடியாது என்பதினால், அந்த மனம் எதை அறிவதாயினும், அதற்கு ஆதாரமான அறிவைக் கொண்டுதான் அறிய முடியும் என்பதை எடுத்துக் கூறுகின்றனர் சித்தர்கள்.

ஆக, அந்த அறிவு ஒன்றுமட்டும்தான் மனதைக் கொண்டு, மற்றவைகளை அறிகிறது என்பதை, தன்னை அறிந்த தத்துவ ஞானிகள் நன்கு அறிகிறார்கள்.

அத்தகைய அற்புத ஞானிகளில் ஒருவரான திருநாவுக்கரசர் பெருமான் பின்வருமாறு கூறுகிறார்.

ஐம்புலன்களின் தூண்டுதலால் நமக்கு வரும் துன்பங்களைக் கட்டுப்படுத்த என்னென்னவெல்லாம் செய்ய வேண்டியிருக்கின்றது! இதற்கு உள்ள ஒரே வழி,

மனத்தைக் கட்டுப்படுத்தி, “**அறிவு**” என்னும் ஒளியை ஏற்றுவதன் அவசியத்தை அறியவேண்டும் என்கிறார்.

**உடம்பெனும் மனையகத்துள் உள்ளமே தகளியாக**
**மடம்படும் உணர்நெய்யட்டி உயிரேனும் திரிமயக்கி**
**இடம்படு ஞானத்தீயால் எரிகொள இருந்து நோக்கில்**
**கடம்பர் காளை தாதை கழலடி காணலாமே.**

அந்தப்பேரறிவாகிய இறைவனின் திருவடிகளை அடைவதற்கு, சிற்றறிவாகிய “**மனம்**” செய்கின்ற செயல் முயற்சிகள் எல்லாம், அந்த அறிவை அறிவதற்காக மட்டுமே இருக்க வேண்டும் என்கிறார் திருமூலர்.

**அறிவுக்கு அழிவு இல்லை ஆக்கமும் இல்லை**
**அறிவுக்கு அறிவல்லது ஆதாரம் இல்லை**
**அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு**
**அறைகின்றன மறை ஈறுகள் தாமே. -** (திருமந்திரம்)

‘**அறிவு**’ என்பது ஞானம். எனவே அறிவுக்கு அழிவு என்பது ஒருபோதும் இல்லை. அதை எவராலும் அழிக்கவும், ஆக்கவும் செய்ய முடியாது. அத்தகைய ஆதி அந்தம் இல்லாத ‘**அறிவை அறிவதும் அதே அறிவு**’ என்பதை வேதங்கள், உபநிஷதங்கள் அறிவிக்கின்றன என்கிறார் தனது திருமந்திரப் பாடலில் திருமூலர் என்ற சித்தர்.

அறிவின் வடிவாய் அமர்ந்த அந்தப் பேரறிவின் பெருமையை காரைக்கால் அம்மையார் என்ற சித்தர் எவ்வாறு காண்கிறார் தெரியுமா?

**அறிவானுந் தானே அறிவிப்பான் தானே**
**அறிவால் அறிகின்றான் தானே - அறிகின்ற**
**மெய்ப்பொருளுந் தானே விரி-சுடர்பார் ஆகாயம்**
**அப்பொருளுந் தானே அவன். - (**அற்புதத் திருவந்தாதி)

அறிபவனும் தானே, அறிவிப்பவனும் தானே, இதை அறிவால் அறிகின்றவனும் தானே, அதை அறிகின்ற மெய்ப்பொரும் தானே, அப்படிப்பட்டவனே அகண்ட ஆகாயமாக எங்கும், எதிலும் பரவி இருக்கின்ற பரம்பொருளும்தானே அவன் என்கிறார்.

இதை பகவத்கீதையில் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் பின்வருமாறு கூறுகிறார்.

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥6 - ३०॥

**யோ மாம் பஸ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஸ்யதி|**
**தஸ்யாஹம் ந ப்ரணஸ்யாமி ஸ ச மே ந ப்ரணஸ்யதி ||**

எவன் ஒருவன் எங்கும், எதிலும் என்னைக் காண்கிறானோ, எல்லாப்பொருள்களையும் என்னிடத்தே

காண்கிறானோ, அவனுக்கு நானென்றும் அழிய மாட்டேன். எனக்கும் அவனென்றும் அழிய மாட்டான்.

இதிலிருந்து, **அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள்** ஆகிய மூன்றும் ஒன்றாகி ஸம்யமம் ஆனால், அங்கே இருப்பது “**அறிவு**” மட்டுமே என்கின்றனர் அறிவை அறிந்துக் கொண்ட அற்புத ஞானிகள்.

ஆகவே, ஒருவன் தனது ஸ்வதர்மத்தை, அதாவது தனக்கென்று நிச்சயிக்கப்பட்ட கர்மத்தை (செயலை), ‘**நான் செய்கிறேன்**’, ‘**நான் அனுபவிக்கிறேன்**’ என்ற அஹங்கார, மமகாரத்தைக் கொண்ட மனநிலையில் செய்யாமல், அவைகளை ஈஸ்வரக் காரியமாகச் செய்து, அதன் பலன்கள் முழுவதையும் “**ஈஸ்வரார்ப்பணம்**” என்று, அறிவிடம் (இறைவனிடம்) ஒப்படைத்து விட்டால், அவனது ‘**சித்தம்**’ தூய்மைப் பெற்று, சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் கண்டு, அந்த அறிவையறிந்த அறிஞனாக (ஞானியாக) ஆகின்றான்.

இவ்வாறு, சாஸ்திரம் விதித்த கடமைகளைச் செய்யும் பொழுது, அதனை இறைவனுக்கு உகந்ததாகச் செய்தால், அதை ‘**கர்மயோகம்**’ என்கிறோம். அதுவே, இறைவனை தனக்குத் தலைவனாகவும், பக்தன் ஆகிய இவன் அவனுக்கு தாஸனாகவும் வழிபட்டால், அதை ‘**பக்தியோகம்**’ என்கிறோம்.

இறைவனின் உண்மைத்தத்துவத்தை அறியும் வழியை "**ஞான யோகம்**" என்கிறோம். ஆக, கர்மயோகம், பக்தியோகம், ஞானயோகம் ஆகிய இந்த மூன்றும் வேறு, வேறல்ல. பாதைகள் பலவானாலும், பயணம் செய்யக்கூடிய இலக்கு எல்லோருக்கும் ஒன்றாகவே இருக்குமானால், நிச்சயம் அவர்கள் ஒரு நாள் அந்த இலக்கை அடைந்து விடுவார்கள்.

அதாவது, பரமாத்மாவைவிட, வேறாக ஒன்றும் இல்லை, "**இருப்பதெல்லாம் இறைவனே**" என்பது '**ஞானம்**' என்றால், பரமாத்மாவைத் தவிர, வேறெதுவும் இல்லை என்று, அவனை அன்பு கொண்டு, வழிபடுவது "**பக்தி**" எனலாம்.

இவ்விரண்டிலும் பொதுவாக உள்ள அம்சம் ஒன்றேயாகும். அது, பரமாத்மாவைத்தவிர ஒன்றும் இல்லை என்ற உணர்வு.

அதனால், பக்தன் சுக, துக்கங்களால் உலகை வெறுத்து ஒதுக்கிவிட்டு, இறைவனை தியானிக்கின்றான். அவ்வாறே, ஞானி சுக, துக்கங்கள் உண்மையல்ல என்பதினால், இந்த உலகை '**மித்யா**' என்று கூறிவிட்டு, ப்ரஹ்மத்தை "**சத்தியம்**" என்று உணர்கிறான்.

எனவே, இருவரும் ஒன்றைத்தான் வழிபாடு செய்கிறார்கள். ஆனால், பக்தனுக்கு பக்தி இருக்கிறது,

ஞானம் இல்லை. அதுவே, ஞானிக்கு ஞானம் இருக்கிறது என்பதினால், எதன்மீதும் பற்று இல்லை.

பொதுவாக, மனம் இரண்டு விசயங்களைப் பற்றும். அதிலே ஒன்று '**அன்பு**' செய்யும், மற்றொன்று '**ஆலோசனை**' செய்யும். அந்தவகையிலே, அன்பு செய்தால், அது "**பக்தி**". அதுவே, ஆலோசனை செய்தால் அது "**ஞானம்**".

எவ்வாறு, பூமியும் அதன் குணமான மணமும், நீரும் அதன் தன்மையான சுவையும் எப்படி ஒன்றை விட்டு ஒன்று பிரியாதோ, அவ்வாறே மனமும், அறிவும் ஒன்றை விட்டொன்று பிரிக்க முடியாது.

ஆக, மனதினால், மனிதன் அறிவை பிரித்துப் பார்த்தான் என்றால், அவன் '**அஞ்ஞானி**' எனவும், மனதினால், அறிவை இணைத்துப்பார்த்தான் என்றால், அவன் "**ஞானி**" எனவும் அறியப்படுகிறான்.

அதாவது, அக்னியை உண்டாக்க அரணிக் கட்டையைக் கடைந்து, அக்னியை உண்டாக்கி, அந்த அக்னியிலேயே இறுதியில், அந்த அரணிக்கட்டையைப் போட்டு எரித்து விடுவதுப்போன்று, விறகடுப்பை எரிக்க, ஒரே ஒரு விறகுக்குச்சியைப் பயன்படுத்தி, அந்தக்குச்சியைக் கொண்டு, மற்ற விறகுகளை அடுப்பில் தள்ளி ஏரித்துக் கொண்டு, அதன் இறுதியில்,

இவ்வளவு நேரமாக அடுப்பை எரிக்கப்பயன்படுத்திய அந்த விற்குக்குச்சியையும் அடுப்பினுள்ளேயே போட்டு எரித்து விடுகிறோம்.

அதுப்போன்று, அந்த அறிவை (இறைவனை) அறிய, மனதைக்கொண்டே மனத்தூய்மை அடைந்து, அந்த தூய்மையான மனதினால், அந்த அறிவை அறிந்து, இறுதியில் அந்த அறிவிடமே மனதை ஒப்படைத்து விடுவது மட்டும்தான், அந்த அறிவாகவே "**மனம்**" மாறுவதற்கான மகத்தான வழி.

இதை அறிந்துக்கொண்டவன் '**அறிஞன்**' **(ஞானி)** எனப்படுகிறான்.

அத்தகைய அறிஞனுக்கு (ஞானிக்கு) மட்டுமே, அனைத்தையும் அறிகின்ற அறிவும், திடமான வைராக்கியமும், அதன்பயனாக, அனைத்து சித்திகளும் சித்திக்கின்றது.

**ஓம் தத் சத்**

